# ஆகம தீக்ஷா விதி



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண் :192

॥ श्रीः ॥

॥ शिवाभ्यां नमः ॥

अघोरशिवाचार्यविरचित

# ॥ आगमदीक्षाविधिः ॥

அகோரசிவாசாரியரின்

# ஆகம தீக்ஷா விதி

(தமிழாக்கத்துடன்)

பதிப்பாசிரியர்:

**தி. ரா. தாமோதரன்,** எம்.ஏ., டி.லிங்.,

முன்னாள் வடமொழி விரிவுரையாளர்

சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர்.



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

**சரசுவதி மகால் நூலகம்**

**மற்றும் ஆய்வு மையம்**

தஞ்சாவூர்.

2014

விலை : ரூ. 90-00



# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | ஆகம தீக்ஷா விதி |
| பதிப்பாசிரியர் | : | தி. ரா. தாமோதரன் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் நூலகம் |
| வெளியீட்டு எண் | : | 192 |
| மொழி | : | சம்ஸ்கிருதம், தமிழ் |
| பதிப்பு | : | நான்காம் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | 2014 |
| தாள் | : | TNPL 18.6 kgs. |
| நூல் அளவு | : | 21 x 14 c.m. |
| பக்கங்கள் | : | 76 |
| படிகள் | : | 500 |
| எழுத்து | : | 16 & 12 |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலக அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | சைவ சமய நூல் |
| விலை | : | ரூ. 90-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சை சரசுவதி மகால் நூலகம் பல்வேறு வகைப்பட்ட சுவடிகளைப் பாதுகாத்து பதிப்பித்தும் வருகின்ற தனிச்சிறப்பு வாய்ந்த ஒன்று. நூலகங்களுள் இது அரியவகை சேகரிப்புகளையும், உலக வரைபடங்களையும், ஓலைச்சுவடிகளையும், கையெழுத்துப் பிரதிகளையும் பெற்று தஞ்சையை ஆண்ட மன்னர்களால் பேணிபாதுகாக்கப்பெற்றது. இந்நூலகத்தில் எங்குமில்லாத சுவடிகளும் காணக்கிடைக்கின்றன .

தமிழ், தெலுங்கு, மராட்டி, சம்ஸ்க்ருதம் போன்ற சுவடி ஆய்வுத் துறைகளும் இங்கே அமைந்து சம்ஸ்க்ருதத்துறை வாயிலாக தி. ரா. தாமோதரன் முன்னாள் வடமொழி விரிவுரையாளர், சரசுவதி மகால் நூலகம், அவர்களால் தமிழாக்கத்துடன் பதிப்பித்தளித்த அகோரசிவாச்சாரியாரின் 'ஆகமதீக்ஷா விதி' என்னும் நூல் தற்போது நான்காம் பதிப்பாக வெளிவருகின்றது.

ஆகமம் என்பது இறைவனை பூசிப்பதற்காக வேண்டி இறைவனாலோ அல்லது முனிவர்களாலோ தோற்றுவிக்கப்பெற்றது. ஆகமம், சைவம், வைணவம், சாக்தம் என்று மூவகைப்படும். இவ்வாகமங்களின் வழி இறைவனைப் பூசிக்க தீக்ஷை என்பது மிகமிக அவசியமாகின்றது. தீக்ஷைகளுள் சிவதீக்ஷை, விசேஷ தீக்ஷை, நிர்வாண தீக்ஷை போன்ற வகைப்பாடுகள் உள்ளன. இந்நூல் யாவரும் பயன்படுத்தும் வகையில் தமிழாக்கத்துடன் திகழ்கின்றது.

இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய அரசிற்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளிவர ஆவன செய்துள்ள நூலக நிருவாக அலுவலர் (பொ.) திரு.ம. சங்கரநாராயணன் B.A., அவர்களுக்கும், நூலகர் முனைவர் எஸ். சுதர்ஷன், M.A.,B.Lit.,M.L.I.S.,Ph.D., அவர்களுக்கும் எனது அன்பார்ந்த பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன். இந்நூல் அச்சில் வெளிவர கணினிப் பிரிவில் பணிபுரிந்த அனைவருக்கும் எனது பாராட்டுதல்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தஞ்சாவூர்
*06-02-2014*

**டாக்டர். என். சுப்பையன்,** இ. ஆ. ப.,
மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்
இயக்குநர்,
சரசுவதி மகால் நூலகம்.



॥ श्री गणेशाय नमः ॥

# ॥ आगमदीक्षाविधि ॥



....य । गोप्त्रे । अनिधानाय । सर्वयोगाधिकृताय । सर्व विद्याधिपाय । ज्योतिरूपाय । परमेश्वर पराय । चेतनाचेतन* । इत्येकविंशतिपदानि । ओं हुं हूं अघोरशिखेर्मतौ । मरौ बीजे । पूषाहस्तिजिह्वानाड्यौ । व्याननागौ वायू । पादचक्षुषीन्द्रिये । विषयोरूपम् । रूपस्पर्शशब्दा गुणाः । त्रिकोणं रक्तमण्डलम् । सुषुप्तिरवस्था । रुद्रः कारणेशः । एतैस्सहितां विद्याकलां संचिन्त्य । ॐ ह्रूं विद्याकलायै हूं फट् इति अस्त्रेण गलान्-नाभि-अतरे संताड्य, संहार मुद्रया पूरकवृन्या सगृह्य ॐ हू विद्याकालायै नमः इति गल सूत्रे संयोज्योम्यच्याविष्टच स्वाहान्तं संनिधानाहुतित्रयं कुर्यात् । ततः ह्रीं प्रतिष्ठाकलायै नमः इति अवलोकयेत् ॥

प्रकृतिगुणबुद्धिअहंकारमनः । श्रोत्रंत्वक्चक्षुः जिह्वाघ्राणवाक्-पाणिपादपायूपस्थशब्दस्पर्शरूपरसगंधआकाशवायुतेजःअब्भूम्यानि चतुर्विं-

---

*ஏட்டில் अचेतनाचेतन என்றுள்ளது.

शणि तत्वानि । श्रैकण्ठ औं कौमार वैष्णव ब्रह्म भैरव कृताकृताख्यं योग अष्टकं प्रकृतौ गुणेच ब्रह्म प्रजेश सौम्य ऐंद्र गांधर्व यक्ष राक्षस पैशाचाख्यं देवयोनि अष्टकम् ।बुद्धौ स्थूलेश्वर । अहंकारे स्थूलेश्वर । मनसि बुद्धींद्रिय । पञ्चकेच । रं कर्ण । कर्मेन्द्रिय पञ्चके । कालञ्जर मण्डलेश्वर । माको द्विरण्ट छगलण्डाख्यं तन्मात्रं पञ्चके । एवमष्टकं अहंकारादि गंध मात्रान्तेषु तत्वेषु अस्थाणु स्वर्णाक्ष । भद्रकर्ण । गोकर्ण । महालय । अविमुक्त । रुद्रकोटि वस्त्रापदाख्याष्टकं आकाशे । भीमेश्वर । महेन्द्र । अट्टहास । विमलेश्वर । नखल नाखल । कुरुक्षेत्र । गयाख्याष्टकं वायुतत्वे । भैरव केदार महाकाल मध्यमेश्वर अम्रतिकेश्वर जल्पेश्वर श्रीशैल हरिश्चन्द्राख्याष्टकं तेजस्तत्वे । लकुलीश, भारभूति, डिण्डि मुण्डि, आषाडी पुष्कर, प्रक्षादि नैमिश प्रभाति अमरेशाख्याष्टकं अप्तत्वे । एवं अष्टकैः सप्तभिः षट्पञ्चशत् भुवनानि रुद्रैः सममान, नमामि । टठडढण तथदधन पफबभम यरलव शषसहल इति वर्णाः चतुर्विंशति । व्योमिन् व्योमिन् । व्यापिन् व्यापिन् । अरूचिन् अरूचिन् । प्रथम प्रथम । तेजस्तेजः । ज्योतिः ज्योतिः । अरूपाग्नि । अधूम अभस्म अनादे नाना नाना धू धू धू धू ओं भूः । ओं भुवः ओंस्वः । अनिधन । निधननिधनोत्भव शिव शर्व परमात्मन् महेश्वर महादेव सद्भावेश्वर महातेजः योगाधिपते, मुञ्च मुञ्च प्रथम प्रथम शर्व शर्व इति द्वात्रिंशत्पदानि ॥

ॐ ह्रिं ह्रीं वामदेव शिरौ मंत्रौ उभौ बीजे सुषुम्ना गांधारी नाड्यौ । उदानसमानौ वायुः पायूरसनेन्द्रिये । रसाख्यो-विषयः । शब्दस्पर्शरूपरसगुणाः । शुभ्रमर्धचन्द्रं मण्डलम् । स्वप्नोऽवस्था । विष्णोकारणेश्वरः । एतैस्समेता: प्रतिष्ठाकलां विलोक्य ॐ ह्रूं प्रतिष्ठाकलायै हुं फडिति शिष्यस्य नाभेः जान्वते पुष्पेण संताड्य पूरकवृत्या संहारिण्या गृहीत्वा ओं ह्रूं प्रतिष्ठाकालयै नमः इति नाभिसूत्रे संयोज्याभ्यर्च्य अग्रेष्टच्च संनिधानायाहुतित्रयं दद्यात् ॥

तदनु ॐ ह्रां निवृत्तिकलायै नमः इति अवलोकयेत् । पृथिवी तत्वमेकम् । भद्रकाली: वरभद्र इति ब्रह्माण्डस्योपरि भुवनद्वयम् । त्रिलोचन लिप्सु नभो विवाह सव....ह त्रिदशेश्वर त्र्यक्ष गणाध्यक्ष विभुशंभु इत्यूर्ध्वेदश । दंष्ट्री फणीन्द्र उदुंबरीश ग्रसन मारुताशन क्रोधन अनन्त भू....धर । वृष इति अधोदश । बलिप्रिय भूतपाल ज्येष्टशर्व सुरेशान वेदपारग ज्ञानभुक् सर्वज्ञ ईश विद्याधिप इति ईशानेनदश । प्रकामद प्रसाद श्रीधर रत्नधर लक्ष्मीधर जटाधर सौम्यदेह धन्य रूपवत् निधीश इति उत्तरे दश । मेघवाहन कपर्दि पञ्चशिख पञ्चांक क्षयांतक तीक्ष्ण सूक्ष्म वायुवेग लघु शीघ्र वायौ दश ॥

सुनाद मेघनाद जलान्तक दीर्घबाहु जयभद्र श्वेत महाबल पाशहस्त अतिबल बल वारुणेदश । दंष्ट्र वर्णलोहित धूम्र विरूपाक्ष उर्ध्वशेफ भयानक क्रूरदृष्टि हन्त मारण निऋति इति दश निऋतौ । धर्मपति धर्मवियोक्तृ संयोक्तृ कपिक्तृ धातृ यातृ हरमृत्यु याम्य इति याम्ये दश । क्षयांतक भस्मांतक अमुदहन ज्वलन हर खादक पिंगल हुताशन अग्निरुद्र । इति आग्नेये दश ॥

त्रिदशाधिप पिनाकि शास्त्र अव्यय विभूति प्रमद दन वज्रदेह वुद्ध अज कपालीश इति पूर्वदश । रुद्र विष्णु ब्रह्महाटक कूश्माण्ड काल अभ्याख्यं षट्कं बुह्माण्ड मध्ये । एवं अष्टाधिक भुवनशतं रुद्रविमानाभिधानं । क्षकारोवर्णः । भव भव भवोद्भव सर्वभूतसुखप्रद सर्वसान्निध्य ( कराय ) *विष्णुरुद्राप ( राय )* अनर्चित अनर्चित असंस्तुत असंस्तुत पूर्वस्थित पूर्वस्थित साक्षि साक्षि गुरु गुरु पतंग पतंग पिंग पिंग ज्ञान ज्ञान शब्द शब्द सूक्ष्म सूक्ष्म शिवशर्व सर्व सर्वद ॐ नमोनमः ॐ शिवायनमो नमः । ओमित्यष्टाविंशति पदानि । ॐ हं हां सद्योजात हृदयाख्यं मन्त्र द्वयम् ॥

---

* கிறிலமடைந்தபகுதி.

अकारलकारौ बीजे । इडापिंगला न(ा)डीद्वयम् ।* आपान प्रणौ वायू उपस्था घ्राणेन्द्रिये । गन्धो विषयः । शब्दस्पर्शरूपरसगन्धाः गुणाः । पीतं चतुरश्रं वज्रांकं मण्डलम् । जाग्रदवस्था । ब्रह्माकारणेशः । एतैर्व्याप्तां निवृत्तिकलां संचिन्त्य ओं ह्लां निवृत्ति कलायै हूं फडिति जान्वधः पुष्पेण संताड्य पूरकेण संहारमुद्रया संगृह्य । ओं ह्लां निवृत्ति कलायै नमः इति जान्वः सूत्रे(ण) संयोज्याभ्यर्च्यावेष्ट्य स्वाहांतं संनिधानाहुतित्रयं दद्यात् । एवं कलानां अवलोकन ताडन ग्रहण संयोजनानि कुर्यात् । सबीज दीक्षायां वर्तमान शरीरारंभक धर्मात् सानुषंगिकधर्मात् समयाचारपाशाच्च अन्यत् बंधकं कर्मकलानां अन्तस्मृत्वा सर्वं सूत्रगतं भावयेत् । निर्बीज दीक्षायां देहारंभक धर्मादानुषंगिकाच्चान्यत् समयाचारसहितां भावयेत् । बुभुक्षु दीक्षायां कालत्रय व्यापि धर्मात्मकं कर्म वर्तमानशरीरे भोगदायकं संभाव्य व्यतिरिक्तं सर्वं धर्मात्मकं पाशसूत्रगतं भावयित्वा व्याप्यव्यापक मनु संदध्यात् मंत्राः पदैः पदानि वर्णैः वर्णा भुवनैः तानि तत्वैः व्याप्तानि ! एते तत्वभुवन-वर्णपद मंत्रा व्याप्याः । मलकर्म मायेया व्यापकाः । पुनः मलादयो व्याप्याः । शांत्यतीतादिकला व्यापकाः । अतस्ताभिः कलाभिः । संग्रहीताभिः तत्वादयो मलादयश्च संग्रहीताः । उपस्थापिताभिरुपस्थापिताः शुद्धाभिः अपि शुद्धाभवन्ति । एवं क्रमेण स्वाहांतैः स्वस्वमन्त्रैः तिसृभिः तिसृभिः

---

* ஏட்டில் सुण्डापिंगला नडीद्वयम् என்றுள்ளது.

आहुतिभिः सतर्प्य ॐ हूं हौं हूं शान्ति अतीताकलायै हूं फट्। ॐ हूं ह्यैं हूं शांति कलायै हुं फट् । ॐ ह्रीं हूं विद्याकलायै हुं फट् । ॐ ह्रीं हूं प्रतिष्ठाकलायै हुं फट् । ॐ हूं ह्य हूं निवृत्ति कलायै फट् । इति प्रत्येकं आहुतित्रयेण दीपनं विधाय तत् सूलकलास्थानेषु ब्रह्महुंध्र भ्रूमध्यगलनाभिजानुषु कुंकुमादिना संमृच्य तस्मिन् शिवं सांगं संपूज्य । ओं हः हूं फडिति शिष्यशिरसि सूत्रे पुष्प नाराच मुद्रया संताडय । ॐ हौं शांत्यतीता कलायै नमः इति प्रविश्य गृहीत्वा स्वाहांतेन त्र्याहुतीः दत्वा ॐ हं हौं हूं भगवन् शांत्यतीता कला पाशममलकर्म शाक्ततत्व भुवादि व्यापकं बंध बंध हूं फडिति सूत्रे ग्रंथिं कुर्यात् । तदनु ललाट प्रदेशे ॐ हः हूं फडिति सूत्रे पुष्पेण संताड्य ॐ शांति कलायै नमः इति प्रविश्य गृहीत्वा स्वाहांतेन त्र्याहुतीर्दत्वा । ॐ ह्रीं हैं ह्रीं भगवन् शांति कलापाशममलकर्म शाक्तितत्व भुवनादि व्यापकं बंध बंध हूं फडिति सूत्रे ग्रंथिं कुर्यात् । पश्चाद्गलेः त्रेण सूत्रे पुष्पेनाराच मुद्रया संताड्य ॐ हूं विद्याकलायै नमः इति प्रवेशग्रहणे कृत्वा स्वाहान्तेनाहुतीः दत्वा ॐ ह्रीं हूं ह्रीं भगवन् विद्या कला पाशममलकर्म शाक्ततत्व भुवादि व्यापकं बंध बंध हूं फडिति सूत्रे ग्रंथिं कुर्यात् ॥

ततः नाभौ सूत्रमस्त्रेण संताड्य ॐ ह्रीं प्रतिष्ठाकलायै नम इति प्रविश्य गृहीत्वा स्वाहान्तेन आहुति त्रयं दत्वा ॐ ह्रीं ह्रीं ह्रीं

भगवन् प्रतिष्ठाकला पाश ममलकर्म शाक्ततत्व भुवादिव्यापकं बंध बंध हुं फडिति सूत्रे ग्रंथिं कुर्यात् । तदनुज्ञान्वधः सूत्रं ॐ हः हुं फडिति सपुष्पनाराचमुद्रया संताड्य ॐ ह्लां निवृत्ति कलायै नमः इति प्रवेशग्रहणे कृत्वा स्वाहांतेनाहुतीः दत्वा ॐ ह्रौं ह्लां ह्रौं भगवन् निवृत्ति कलापाश ममलकर्म शाक्त तत्व भुवादि व्यापकं वंध बंध हुं फडिति सूत्रे ग्रंथिं कुर्यात् । ततः सूत्रं तस्य दक्षिणस्कंधेन विधाय विस्मताद्यधर्मोषाय मूलशतहोमं विदध्यात् । ततः सूत्रं अवतार्य शराव संपुटे हृदस्त्र संपुटितं हृदार्चितं कृत्वा संधात्व स्थण्डिले मण्डलेवापि निवेद्य रक्षार्थं शिव कुम्भे भगवन् दक्षिणीयं त्वयेति विज्ञाप्य निवेशयेत् । ततः शिष्यं अधिकरणपञ्चके पूजापुरस्सरं प्रणामं कारयित्वा मण्डपात् वहिः मलत्रयं कृत्वा पूर्वास्यं मुत्तरास्यंवा प्रथम मण्डले निवेश्य कुशपाणये तस्मै पञ्चगव्य चुलुकत्रय दत्वा ॐ हौं आत्मतत्वाय स्वाहा । ओं हौं विद्या तत्वायस्वाहा । ओं हौं शिवतत्वाय स्वाहा इति प्रत्येकं अन्तरान्तरं आचमनयुक्त प्राशयेत् । द्वितीयस्मिन् मण्डले* चरोग्रासत्रयं पञ्चांगुल्या हृतमदंत-स्पर्शं तथैव प्राशयेत् । ग्रासाष्टकं वा ततः तृतीये मण्डले दण्डकाष्टं हृदा दत्वा दंतान् संघृष्य प्रक्षाल्य ऊर्ध्वमुखं पातिते प्रगुदग्नीशानोर्ध्व-पश्चिमेषु गर्भन्यित्र पातोशुभ इतिज्ञात्वा समाचम्यांतः प्रविश्य दंतकाष्ट

---

* ஏட்டில் कुण्डले என்றுள்ளது

पातदोषे तच्छांत्यर्थमस्त्रेणाष्टोत्तरशतं दत्वा कायवाङ् मानसोद्भूत छिद्र दोष शांत्यर्थं मूलब्रह्मा गैर्यथा शक्तया दत्वा पूर्णां दत्वा चरुशेषं नैवेद्यं दत्वा आचमनादि दत्वा संपूज्य एवं विज्ञापयेत्। आयागकर्म संतान-पर्यंतोयं त्वया विभो। पशूनां पाशनाशाय न ह्यातव्योऽग्न संनिधिः इति पततोग्निस्थं निरुध्य भूः आहुतिभिः दत्वा अन्याद्याहुति चतुष्टयं दत्वा बलिं दत्वा समर्पित क्रियाशेषं मण्डलेशं विनिरुध्य कलशस्थं तत्परिग्रच्चं च विवक्षित समयविधि विज्ञाप्य निरुध्य यागमण्डपे शुद्ध भूमौ दर्भशयने स्वशितालब्दे बुभुक्षु प्राचीनमस्तकं मुमुक्षु अपि तथैव शुद्ध भस्मशयने दक्षिणमस्तकं शिखा गुप्त शिखं हृन्मंत्रेण शिष्यं समारोप्य खट्वांगं वन मुद्रांच त्रिशूलमभयं दधत्। स्वप्नमाणवकः पिंगो जटा चंद्रार्धशेखरः इति ध्यात्वा ओं नमः शंभो त्रिणेत्राय पिंगलाय महात्मने ॥





# பதிப்புரை

அகோர சிவாச்சாரியார், வடமொழியில் எழுதப்பட்ட சைவ சித்தாந்த நூல்களுக்கு உரைசெய்த மாபெரும் உரையாசிரியர் ஆவார். இவர் தனது உரையில்* தான் சோழ தேசத்தைச் சேர்ந்தவர் என்றும், கௌண்டியன்ய கோத்திரத்தில் (குண்டின குலத்தில்) பிறந்தவரென்றும் கூறுகிறார். இவர் கி. பி. 12ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்பது, இவர் எழுதிய 'அகோர சிவா பத்ததி' என்ற நூலில் எழுதி முடிக்கப்பட்ட ஆண்டு, இவராலேயே குறிப்பிடப்படுவதிலிருந்து அறிய முடிகிறது. அந்நூல் கி. பி. 1158ல் எழுதி முடிக்கப்பட்டதெனக் குறிப்பு உள்ளது.

இவரது ஆசிரியர் பெயர் 'சர்வாத்ம சிவா' எனத் 'தத்துவத்திரய நிர்ணயம்' என்ற நூலில் கூறியுள்ளார். இவர், சைவநூல் உரையாசிரியர் என்று நாம் அறிவோம். ஆனால் இவரது பெயரில் காவ்யங்களும் நாடகமும் உண்டு. அவை: ஆச்சர்யசாரம், பாகண்டாபஜயம், பக்தபிரகாசம் ஆகிய காவியங்களாம். "அப்யுதய" எனும் நாடகத்தையும் இவர் எழுதியதாகத் தெரிகிறது.

இவர் உரைசெய்த சித்தாந்த நூல்கள் பின்வருமாறு:

போஜதேவரின்

1. தத்துவப் பிரகாசிகை

சத்யோஜ்யோதியின்

2. தத்துவசங்கிரகம்
3. தத்துவத்ரயநிர்ணயம்
4. போககாரிகா

---

* தத்துவத்திரய நிர்ணயம். சுலோ. 22 உரை.

... ... लोकेपि प्रथितेन कुण्डिनकुले चोलेष्वलङ्कुर्वता ॥

ராமகண்டரின் (II)
5. நாதகாரிகா
ஸ்ரீகண்டரின்
6. ரத்னத்ரயம்
நாராயணகண்டரின்
7. மிருகேந்திர விருத்தி

ஆகிய நூல்களுக்கு உரை செய்துள்ளார்.

மேலும் கிரியாக்ரமத்யோதிகா, அகோரசிவ பத்ததி, ஆகமதீக்ஷா ஆகிய சமய நூல்களையும் எழுதியுள்ளார்.

இதுவரையிலும் ஏட்டளவில் இருந்து அச்சிடப்படாத ஆகமதீட்சாவிதி' என்னும் இவரது நூலைப் பதிப்பிக்கும் வாய்ப்பு, சரஸ்வதி மகால் நூலகம் மூலம் எனக்குக் கிடைத்தது குறித்து பெருமகிழ்ச்சி அடைகிறேன். இச்சுவடி குறையுடையது. முன்பகுதியில், சில இல்லை. ஆயினும், சைவ உலகத்திற்கு, மீதம் உள்ளனவாகிலும் தெரியப் படுத்த வேண்டுமென்ற பேரவாவில் இதைப் பதிப்பித்துள்ளேன். பிழைகள் மலிந்திருந்த இச்சுவடியினை, என் சிற்றறிவிற்கு எட்டியவாறு செப்பனிட்டு, பதிப்பித்துள்ளேன். அறிஞர்கள் பிழை பொறுப்பார்களாக,

இந்நூலைப் பதிப்பிக்க வாய்ப்பளித்த நூலகத் தலைவரும், மாவட்ட ஆட்சியரும் சைவச் செல்வருமாகிய திரு **ச. மெய்கண்டதேவன்**, இ. ஆ. ப., அவர்களுக்கு எனது நன்றியினைத் தெரியப்படுத்திக் கொள்கிறேன். நூலை சிறந்த முறையில் அச்சிட்டு வெளிவர உதவிய நிர்வாக அதிகாரி (பொறுப்பு)யாக இருக்கும் திரு **அ. பஞ்சநாதன்**, அவர்களுக்கும், மற்றும் நூலகப் பணியாளர்கள் அனைவருக்கும் எனது நன்றி.

— **தி. ரா. தாமோதரன்**

# நான்முகம்

சைவ சித்தாந்தம், தொன்மைக் காலம்தொட்டு அண்மைக்காலம் வரையிலும், பல்வேறு கோணங்களில் ஆராயப்பட்டுள்ளது. சைவ சித்தாந்தக் கருத்துக்கள் துவைதம், அத்துவைதம், துவைதாத்துவைதம், விசிஷ்டாத் துவைதம் முதலிய பல்வேறு தத்துவக் கோணங்களில் தரிசனங்களாக, அறிஞர்களால் விளக்கப்பட்டுள்ளன. பாசுபதர்களும் சித்தாந்த சைவ தரிசனவாதிகளும் துவைத ரீதியில் சைவத்தை விளக்க முற்பட்டனர். பின்னர் வீர சைவர்களின் விளக்கம், விசிஷ்டாத்வைதம் அல்லது பேதா பேதவாதமாக மலர்ந்தது. ஸ்ரீகண்டரின் தரிசனமானது, சைவ விசிஷ்டாத்வைத விளக்கத்தை வழங்குகிறது. லகுலீச பாசுபதர்களுடைய சைவதரிசனம், துவைதாத்வைத விளக்கம் தருகின்றது. நந்திகேச்வர தரிசனம், ரஸேச்வர தரிசனம், காஷ்மீர சைவம் ஆகியன பிரத்யபிஞா சம்பிர தாயமான அத்வைத வாதத்தை முன் வைத்தன[1].

மேற்குறித்த எட்டு சம்பிரதாய வாதிகளோடு சப்த பிரம்மாத்வைதவாதிகள், வியாகரண தரிசினவாதிகள், துவைதாத்வைதவாதிகள் ஆகியோரின் தலைவர்களாக இருந்தவர் அனைவரும் சைவர்களே. நியாய-வைசேஷிக வாதிகளும் தொடக்க காலத்தில் சைவயோகிகளாக இருந் தவர்கள் என்று டாக்டர் கோபிநாத் கவிராஜா தனது நூலில் குறிப்பிடுகின்றார்.[2]

"சித்தாந்தம்" என்பதற்கு 1) சித்தர்களின் முடிவான தத்துவம் என்றும், 2) இறுதிச்சொல் அல்லது முடிவுகளின்

---

1 Bhaskari, Vol. III Benaras 1954.

2 M. M. Gopinath Kaviraja, Gleanings from the History and Bibliography of the Nyaya—Vaisesika Literature, Calcutta, 1961.

முடிவு என்றும் இருபொருள் கொள்வர்[1]. 'முடிவுகளின் முடிவு' என்பது இதற்குமேல் வேறு எந்தத்தத்துவ நெறியும் இல்லை எனும் கருத்தை நமக்கு உணர்த்துகிறது.

**ஆகமம் :**

சைவ சித்தாந்தத்திற்கு அடிப்படையாக இருப்பது சைவாகமங்களாகும். இருபத்தெட்டு சைவ ஆகமங்கள் உண்டென்று கருதப்படுகிறது. அவைகளை ஸ்ரீ குமாரர் முறைப்படுத்துகிறார்.

कामिकं१ योगजं२ चिन्त्यं३ कारणं४ त्वजितं५ परम्६ ।
दीप्तं७ सूक्ष्मं८ सहस्रं९ च अंशुमान्१० सुप्रभेदकम्११ ॥

विजयं१२ चैव निःश्वास१३ स्वायम्भुवमतः१४ परम् ।
वीरं१५ च रौरवं१६ चैव मकुटं१७ विमलं१८ तथा ॥

चन्द्रज्ञानं१९ च बिम्बं२० च प्रोद्गीतं२१ ललितं तथा ।
सिद्धं२३ सन्तान२४ सर्वोक्तं२५ पारमेश्वरमेव२६ च ॥

किरणं२७ वातुलं२८ चैव त्वष्टाविंशति संहिताः ।
मूलभेदमिति ख्यातमसंख्यमुपभेदकम् ॥

இவ்வாகமங்களில் கூறப்பட்ட தீட்சை முறைகளும் வகைகளும் விதிகளும் என்ன என்பதை நாம் சிறிதேனும் இங்கே சிந்திப்பது சாலச்சிறந்ததாகும். 'தீட்சை', சிறப்பாக மூவகைப்படும். அவை சிவ(சமய)தீட்சை, விசேஷ தீட்சை, நிர்வாண தீட்சை என்பனவாம்.

தீட்சை
- சிவதீட்சை (சமயதீட்சை)
- விசேஷதீட்சை
- நிர்வாணதீட்சை

---

1 K. S. Pillaiy, the Metaphysics of the Saiva Siddhanta System. P. 5 "The word Siddhanta bears two meanings Viz 1) the conclusion of the Siddhars, 2) the final word or the end of ends."

**சிவதீட்சை வகைகள் :**

நயனதீட்சை, பரிசதீட்சை, வாசிகதீட்சை, பாவனு தீட்சை, சாஸ்திரதீட்சை, யோகதீட்சை, ஔத்திரிதீட்சை எனச் சிவதீட்சை ஏழு வகைப்படும். இவைகள் ஒவ்வொன் றும் ஆசிரியன் யாருக்கு எப்பொழுது தரவேண்டும் என்று காஞ்சீபுரம் ஸ்ரீ பஞ்சாக்கர யோகிகள் அருளிச்செய்த "சைவபூஷணம்" என்ற வடமொழி நூலில் கூறுகிருர்*.

**1. நயன தீட்சை :**

ஆசிரியன் "சிவோகம்" (நானே சிவன்) பாவனை செய்து கொண்டு தன்னுடைய கண்களைச் சிறிது திறந்து மாந்திரீகனுயிருக்கிறவன் கருட பாவனையினுல் சர்ப்பத் தால் தீண்டப்பட்டவனது விஷம் நீங்குமாறு பார்ப்பது போல், சிஷ்யனை சிவபாவனையினுல் பார்த்துப் "பாச நீக்கம்" செய்வதாகும்.

**2. பரிசதீட்சை :**

ஆசிரியன் தன்னுடைய வலதுகரத்தை சிவனுடைய கரமாக எண்ணி அவ்வாறே அர்ச்சித்து, பின்னர் சிஷ்ய னுடைய சிரமுதலாக எல்லா அங்கங்களையும் அந்தக்கையால் தொடுவதாகும்.

**3. வாசிகதீட்சை :**

ஆசிரியன் "சிவோகம்" என்று தியானித்து பாவனை செய்துகொண்டு சிஷ்யனை சிவனுடைய திருநாமங்களை கூறச்செய்து மனனம் பண்ணுமாறு செய்தல் ஆகும். எவ்வாறெனில், மாணிக்கவாசகர் சிவபெருமானுடைய திருநாமங்களைச் சொல்லிக்கொடுத்து இராஜகுமாரத்தி யின் ஊமைத்தன்மையைப் போக்கியது போலும்.

**4. பாவனுதீட்சை :**

ஆமையானது முட்டையை நினைத்துப் பிள்ளையை வெளிப்படுத்துவது போல, ஆசிரியன் தன்னுடைய

---

*காஞ்சீபுரம் ஸ்ரீ பஞ்சாக்கர யோகிகள், சைவ பூஷணம், சுலோ. 180, 181 & 182.

'சிவோகம்' பாவனையினால் மனதிலே சிஷ்யனை நினைத்துப் பாச நீக்கம் செய்வதாகும். இது 'சிந்தனதீட்சை' எனவும் பேசப்படும்.

**5. சாத்திரதீட்சை :**

சைவ சாத்திரங்களைப் பிழையறச் சிஷ்யனுக்குச் சொல்லி வைப்பதாகும்.

**6. யோகதீட்சை :**

ஆசிரியன் நாலிதழ்த் தாமரையான மூலாதாரம், ஆறிதழ்த் தாமரையான சுவாதிட்டானம், பத்திதழ்த் தாமரையான மணிபூரகம், பன்னிரண்டிதழ்த் தாமரையான அநாகதம், பதினாறிதழ்த் தாமரையான விசுத்தி, இரண்டிதழ்த் தாமரையான ஆக்கினையென்னும் ஆறாதாரங்களையும் சிஷ்யனுக்கு வருணனை குணமாகத் தரிசிப்பித்தலாகும்.

**7. ஔத்திரிதீட்சை :**

குண்டமண்டல வேதிகைகளுடனே கூடினதாகும்.

இவ்வேழு வகை தீட்சையின் முறைகளை அறிந்து கொள்வதால்தான், ஒருவன் முழுச் சைவனாக முடியும். மேற்குறித்த ஏழுவகை தீட்சைகள் யாவும் ஔத்திரிய தீட்சைக்கு அங்கமாய் விளங்குவதால் ஔத்திரிய தீட்சையே மேலானதாகும். ஆயினும் ஏனைய தீட்சைகளாலும் பாவம் நீங்கும் என்பதில் ஐயமில்லை.

**விசேஷ தீட்சை வகைகள் :**

**1. சைவமுத்திரா தீட்சை :**

செம்பு முதலியவற்றோடு செய்யப்பட்ட உருத்திராக்கங்களால் ஆக்கிய, திருவேடமாகிய சிவமுத்திரையை சமய தீட்சையிலாவது அதற்கு முன்னாவது சிஷ்யனுடைய காதுகளில் மந்திர சகிதமாகத்தரிக்கவேண்டும். இதுவே முதலில் செய்யும் சிவமுத்திரா தீட்சை எனப்படும். சுவர்ணம் முதலியவற்றோடு செய்யப்பட்ட உருத்திராக்கங்களுடன் கூடிய சட்குண்டலமென்னும் சுந்தர வேடமாகிய சிவமுத்தி

ரையை விசேட தீட்சையில் தரிசிக்கவேண்டும். இவ்வாறன்றி அன்பர்களுடைய அன்பிற்குத் தக்கவாறு சிவனது அடிமையென்பதைத் தெரிவிக்கும் முத்திரையைத் தரித்தலும் சைவமுத்திரா தீட்சை ஆகும்.

## 2. சாதார நிராதார தீட்சைகள் :

பொதுவாக தீட்சையினை இரு வகையாகப் பகுப்பர். அவை சாதார தீட்சை, நிராதார தீட்சையென இரண்டு வகைப்படும். சகல வர்க்கத்து ஆன்மாக்களுக்கும் ஆசிரியர் செய்வது சாதார தீட்சையாகும். பிரளயாகலர், விஞ்ஞானகலர் என்னும் இருவகை ஆன்மாக்களுக்கும் ஸ்ரீ மகாதேவர் தாமே செய்வது நிராதார தீட்சையாகும்.

**சாதார தீட்சை** மேலும் இருவகைப்படும். அவை சபீஜ தீட்சை, நிர்பீஜ தீட்சை ஆகும். இவற்றுள் சபீஜ தீட்சை சமயாசாரங்களுடன் செய்யப்படுவது. நிர்பீஜ தீட்சை சமயாசார சுத்தியுடன் செய்யப்படுவது. இவ்வாறு சிவாகமங்களில் கூறப்பட்டுள்ளது. ஆகமதீட்சா விதியில் அகோர சிவாச்சாரியார் சாதார தீட்சை செய்யும் முறையினை விளக்கமாகக் கூறியுள்ளதைப் பின்வரும் பகுதியில் காணலாம்.

### நிர்வாண தீட்சை வகைகள் :

"ஞானரத்னாவளி" எனும் நூலில் நிர்வாண தீட்சை நால்வகைப்படும் என்று கூறப்பட்டுள்ளது.

### அ) உலோகதர்மிணி தீட்சை :

பாபகர்மம் எவ்வளவு உண்டோ அவை அனைத்தையும் சோதித்து, புண்ணிய கர்மங்களைச் சோதியாமல் இல்வாழ்க்கையில் ஈடுபட்டுள்ளவனுக்குச் செய்யப்படுவது உலோகதர்மிணி தீட்சையாகும்.

### ஆ) சிவதர்மிணி தீட்சை :

புண்ணிய பாவங்களிரண்டையும் நன்றாகச் சோதித்து மோட்சத்தில் விருப்பமுடைய துறவிக்குச் செய்யப்படுவது சிவதர்மிணி தீட்சையாகும்.

## இ) சத்தியோ நிர்வாண தீட்சை :

சற்குருவானவர் சடத்துவ சோதனை செய்து சிகாச்சேத ஓமமும் செய்து சிவபதத்தில் ஆன்மாவைச் சேர்த்த மாத்திரத்தில் தேக நீக்கமுண்டாவது.

## ஈ) அசத்தியோ நிர்வாண தீட்சை :

மேற்குறித்த சத்தியோ நிர்வாண தீட்சைக்குக் கூறிய வாறன்றி; பிராரத்த கர்ம அனுபவத்தின் முடிவில் சிவபதத்தில் ஆன்மாவைச் சேர்ப்பது ஆகும்.

சமயதீட்சை, நிர்வாணதீட்சை முதலியவற்றைப் பெறுவதினாலே ஒருவன் உயர் குலத்தவனாக மாறுவான். இக்கருத்தை "பிராமண குருவானவர் சூத்திரரான அனைவருக்கும் சிவதீட்சை உபதேசம் செய்யும் காலத்தில் சிஷ்யனுடைய செவியிலே மந்திரோபதேசம் செய்ய வேண்டும். வாகீசுவரனுடைய கர்ப்பக் கோளத்தினின்றும் இந்தச் சிஷ்யன் பிறந்ததாகப் பாவிக்கவேண்டும். அதன் பின்னர், சூத்திரத்தன்மை நீங்கி இருபிறப்பாளன் (பிராமணன்) ஆகிறான்; சிஷ்யனுக்கும் தனக்கும் நாடி ஒன்றாகப் பாவிக்க வேண்டும். பின்னர் ஸ்தாலியென்னும் பாத்திரத்தில் சமைத்த அன்னத்தை மூன்று கூறு செய்து, அவற்றுள் ஒரு கூறு மண்டலேஸ்வராதிகளுக்கும், மற்றொரு கூறாகிய அமுதத்தை சூரியன் முதலான மண்டல தேவதைகளுக்கும் நிவேதித்து மீதமுள்ள ஒரு கூறு, சிவதீட்சை நிறைவேறிய பின்னர் ஒரு பந்தியிலே சிஷ்யனுடனே இருந்து உண்ணப் படவேண்டும். இவ்வாறு பிராமண குருவானவர் செய்ய வேண்டும். இதுவே உத்தமம்" என சைவபூஷணத்தில் கூறப்பட்டுள்ளதிலிருந்து அறிகின்றோம்.



# ஆகம தீக்ஷாவிதி



## தீட்சை விதிகள் :

அகோர சிவாச்சாரியார் "ஆகம தீக்ஷாவிதி" என்னும் சிறுநூலை எழுதியுள்ளார். இந்நூல் நமது நூலகத்தில் B. 11391, D. 15286, இலக்கங்களுடைய பனையோலைச் சுவடியாகும். கிரந்த எழுத்தில் எழுதப்பட்டுள்ள இந்நூல் முதல் 6 ஓலைகளின்றி குறைவுடையதாக உள்ளது. தொடக்கம் இல்லை. இதன் வேறு ஒருபிரதி இதிலிருந்து சிறிது மாறுபட்டுள்ளதோடு, பெரிதும் சிதிலமடைந்துள்ளது. சைவ சமயாச்சாரியர்களுக்கும் சைவர்களுக்கும் பெரிதும் பயன்படும் என்பதாலும் இருப்பதையேனும் உலகத்திற்குத் தர வேண்டுமென்ற ஆர்வத்தாலும் குறைவுடையதாயினும் பதிப்பிப்பது நன்றெனத் தோன்றியது.

இந்நூல் தொடக்கமின்றி இருப்பதனால் சைவபூஷணத்தில் கூறப்பட்டுள்ள சில தீட்சா விதிகளைச் சேர்த்து இங்கே தொகுத்தளித்துள்ளேன். இதனால் ஆகம தீட்சாவிதியில் விடுபட்ட சில பகுதிகளில் இருக்கவேண்டிய செய்திகள் நமக்குப் புலனாகும்.

## சிவதீட்சை :

சிவதீட்சை செய்யுங் காலத்து முதலாவதாக அங்குரார்ப்பணம் செய்து, அதன்பின்னர் சிவதீட்சை செய்ய வேண்டும் என்று காமிகாகமத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அங்குரார்ப்பணம் செய்யும் முறை வருமாறு :

அங்குரார்ப்பணம் :

தீட்சை செய்யும் தினத்திற்கு முன்னர் ஒன்பது நாளிலாவது ஐந்து நாளிலாவது அங்குரார்ப்பணம் செய்ய வேண்டும். செய்யுமிடம் தீட்சை மண்டபத்துள் நிருதி திசை அல்லது ஈசான திசையாக இருத்தல் வேண்டும். அந்த இடத்தில் கலப் அரிசி முதற்கொண்டு எவ்வளவு கூடுமோ அவ்வளவு அரிசியாலாவது தானியங்களாலாவது ஆசிரியர் கை முழத்தில் சதுரச்சரமாக ஒரு மண்டலமிட்டு, அதில் தாமரைபோல் கீறி, அதனைப் பதினாறு கோஷ்டமாக்கி, அவற்றுள் நடுவிலுள்ள நான்கு கோஷ்டத்தை ஒன்றாக்கி, அதில் குமுதாசனம் கற்பித்து, அந்த ஆசனத்தில் சந்திர கும்பத்தையும் ஏனைய பன்னிரண்டு பதங்களிலும் பன்னிரண்டு பாலிகைகளை, தர்ப்பையினாலே மூடப்பட்ட துவாரங்களையுடையதாயும், மூன்றிழையினாலாவது, ஐந்து இழையினாலாவது, ஏழிழையினாலாவது சுற்றிலும், கட்டப்பட்ட அரசிலை, வாகையிலை வில்வ இலை, அருகம்புல், பசு மஞ்சள், தர்ப்பைப்புல் ஆகியவைகளை உடையதாகவும், எருமுட்டைப் பொடி சேர்த்து மணலை இதனோடு கூட்டி முன்விதிப்படிக் கொண்டுவரப்பட்ட மண்ணினால் நிறைத்து வலமாக வைத்து, அந்தக் கும்பத்திலுள்ள நீரில் பாவிக்கத் தகுந்த மலர்ந்த தாமரையில் சந்திரனை பூரணமான அங்கத்தையுடையவராகவும், ஒரு முகமும், ஆம்பல் மலர்களால் ஒளிருகின்ற இரு கைகளையும் உடையவராகவும், இரு கண்களையுடையவராகவும், வெளுப்பாகவும், ரோகிணி கிருத்திகா தேவி என்னும் இவர்களுடன் கூடினவராகவும், உலகம் மகிழ்வதற்குக் காரணமாக இருக்கிறவராகவும் எண்ணி, கும்பத்தில் அவரையும் பன்னிரு பாலிகைகளில் பன்னிரு சூரியர்களையும், ஆசன மூர்த்தி மூல மந்திரங்களால் ஆதார சக்தியையும் வணங்க வேண்டும்.

பின்னர், ஒரு பாத்திரத்தில் இரு நாழி நீர் நிரப்பி, சாலி நெல்லிட்டு, எள்ளு, அவரைக்கொட்டை, துவரை, கடலை, கடுகு, பயறு, உளுந்து, கொள்ளு ஆகிய எட்டுப்

பொருள்களுமோ, அல்லது ஏழு அல்லது ஐந்து பொருள்களோ அந்த நெல்லுடன் கூட்டிக் கலந்து, பாலினால் மந்திரத்துடன் மூன்று முறை கழுவி, இருதய மந்திரத்தால் அருச்சித்து, ஏழுமுறை மந்திரித்து, மங்கல வாத்தியங்களுடன் இந்தப் பாலிகைகளுள் இந்த வித்துக்களை இட வேண்டும். இட்டபின் சந்திர கும்பத்திலுள்ள நீரினால் நனைக்கவேண்டும். சிவதீட்சை முடிந்து ஐந்து அல்லது ஏழு அல்லது ஒன்பது நாளுக்குப்பின் அந்த அங்குரார்ப்பணங்களைப் பார்த்துச் சுபாசுபம் அறிந்து ஓமம் பண்ண வேண்டும். ஓமம் செய்த பின்னர் அங்குரங்களை (முளைகளை) நீரில் இடல் வேண்டும். இது சிவதீட்சை மங்களாங்குர விதியாகும்.

## இரக்ஷா பந்தனம் (காப்பு கட்டுதல்):

சிவதீட்சை செய்யும்போது ஆசிரியர் சிஷ்யனுக்கு காப்பு கட்டுதல் செய்யவேண்டும். ஆசிரியர் வடக்கு முகமாக இருந்துகொண்டு, சிஷ்யனைக் கிழக்கு முகமாக நிற்கச் சொல்லி, வெண்கலம் முதலான பாத்திரத்தில் நாலு நாழி அரிசியும் ஒரு பாக்கும், மூன்று வெள்ளை வெற்றிலையும், ஒரு தேங்காயும் ஒரு பாத்திரத்தில் விபூதியும் வைத்து, பொன்னால் செய்த காப்பாவது அல்லது மூன்றிழை, ஐந்திழை முதலாக ஒற்றைபடும் இழையினால் முறுக்கப்பட்ட பொன்னிறமான பருத்தி நூலால் செய்த காப்பாவது அந்தப்பாத்திரத்தில் வைத்து மந்திரித்து. பின் அந்தக் காப்பு நூலை எடுத்து குருவானவர் வலது பெருவிரல் நீங்கலாக, ஏனைய விரல்களினால் அஸ்த்ர மந்திரத்தால் மும்முறை உருவி, சிஷ்யனுடைய வலது கையில் சிவமந்திரத்தால் தரித்தல் வேண்டும்.

## சைவாக்கினி காரியம், கர்ப்பதானம்:

தீட்சாக்னியை 'ஹூம்பட்' என்று சொல்லி சுவாலை செய்தபின், கர்ப்பாக்னியை வணங்கவேண்டும். இருதய

மந்திரத்தால் தேவியின் இடது கையில் தர்ப்பையால் செய்யப்பெற்ற கங்கணம் கொடுக்கவேண்டும். எள்ளால் சத்யோஜாத மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு மூன்று ஓமம் பண்ணி இருதய மந்திரத்தால் மூன்றுமுறை வணங்க வேண்டும். இது 'கர்ப்பாதானம்' எனப்படும்.

இங்ஙனமே வாமதேவத்தாலும் சிரசாலும் ஓமம் செய்வது 'பும்சவனம்' ஆகும். அகோரத்தாலும் சிகையாலும் மூன்று ஓமங்கள் செய்வது 'சீமந்தம்'. தத்புருடத்தாலும் கவசத்தாலும் ஓமம் செய்வது 'சாதகன்மம்' இந்தக் காரியங்களை நடத்திய பின்னர், கர்ப்ப மலங்கள் நீங்கும் பொருட்டு கவசத்தால் சுவாலை செய்து. அருக்கிய ஜலங் கொண்டு, அஸ்திரத்தால் புரோட்சனம் செய்து, மறுபடியும் கவசத்தால் சுவாலை செய்து தர்ப்பையினால் செய்யப்பட்டக் கங்கணத்தை எடுத்து பொன்கங்கணம் கொடுக்கவேண்டும். பின் இருதயத்தால் பூசை செய்து, சூதகம், நிவிருத்தியாகும் பொருட்டு, அருக்கியம்கொண்டு சிவாஸ்த்திர மந்திரத்தால் புரோட்சனம் செய்யவேண்டும். பின் அஸ்த்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு தர்ப்பையினால் தாடனம் (அடித்தல், தொடுதல்) செய்து வௌஷட்டுடன் கூடின கவசத்தால் அப்யுக்ஷணம் (முடுதல்-இது எண்வகைச் சுத்திகளில் ஒன்று-பிற்சேர்க்கை காண்க.) செய்து மேகலையில் தர்ப்பைகளால் கிரந்தி செய்து (முடிந்து) ஒரு முழ நீளமுள்ள பசுஞ் சாணத்தைப்பரப்பி குண்டத்தின்கீழ், மேகலையின் பெரு விரல் பருமனும், ஒரு முழ நீளம் கொண்ட பலாசக் கொம்பாலாகிய பரிதியையும் நிறுத்தவேண்டும். அக்னியினுடைய பல், நா, கடைவாய்ஜலம் இவைகளைச் சுத்தி செய்யும் பொருட்டு ஐந்து சமித்துக்களை, அடியையும் முடியையும் நெய்யில் தோய்த்து இருதய மந்திரத்தால் ஓமம் பண்ணவேண்டும். பரிதியில் பிரம்மன், சங்கரன், திருமால், அனந்தர் ஆகியோரையும், கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய திக்குக்களில் உள்ள பசுஞ்சாணத்தால் இந்திராதி பதின்மரையும் வணங்கவேண்டும். அதன்

பின் இவர்களிடம், அக்னி, குழந்தையைக்காக்கும் பொருட்டுச் சொல்ல வேண்டிய வார்த்தையைக் கூறவேண்டும்.

பின்னர், ஸ்ருக்[1], ஸ்ருவம்[2] இவைகளின் சுத்தி கூறப் படுகின்றது. நீரிக்ஷணம் (பார்த்தல்) முதலிய நான்கு சுத்திகளைச் செய்து, ஸ்ருக்கைமேல் நோக்கின முகமாகவும் அவைகளைத் தர்ப்பைகளுடன் எடுத்து உயர்ந்த தர்ப்பங் களை வைத்து, நூலால் கட்டி, அடியையும் நடுவையும் தலையையும் தொட்டுப்பிடித்து அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு அருக்கிய நீரால் தெளித்து அப்யுக்ஷணமும், கவசத்தால் அவகுண்டனமும்செய்து காஷ்டத் தைத் தியாகம் செய்யும் பொருட்டு இருதயத்தால் இவை களை அக்னியில் காய்ச்சவேண்டும்.

பிறகு அக்னியை மூன்று முறை சுற்றி, நுனி, நடுவு, அடி இவைகளில் பிரம்மன், திருமால், ருத்திரன் ஆகியோரை வணங்கி, சுருக்கில் சக்தியையும், ஸ்ருவத்தில் சிவனையும் நியாசம்செய்து, பின் பிரம்மன், திருமால், ருத்திரன் ஆகியோரைச் சிந்தித்து, கவசத்தால் திரிசூத்திரங்கொண்டு ஸ்ருக், ஸ்ருவம் இவைகளின் கண்டத்தில் சுற்றித் தனக்கு வலப்பக்கத்தில் தர்ப்பைமேல் மூலத்தால் தாபித்து இருதயத்தால் அருச்சிக்கவும்.

பிறகு, நெய்யின் சுத்தி கூறப்படுகின்றது. ஈக்ஷணம் முதலியவற்றால் சுத்தி செய்யப்பெற்ற நெய்யை மூன்று முறை அக்னியைச் சுற்றி அக்னி கோணத்தில் வைக்க வேண்டும். பிறகு தன்னைப் பிரம்மனாகத் தியானித்து' குண்டத்தின்மேல் மூன்றுமுறை அக்னியில் காய்ச்சி, அக்னித் திக்கில் வைத்து, தர்ப்பை முனையால் நெய்பிந்துவை,

'ஓம் ஹாம் பிரம்மனே ஸ்வாஹா'

என்று சொல்லிக்கொண்டு ஓமம் செய்வதாகிய ஸ்தாபன மும், அதன்பின் திருமால் வடிவமாகத் தன்னுடைய

---

1, 2 மரத்தாலான துடுப்பு போன்ற பொருள்கள்.

உடலைத் தியானித்து, ஈசானத்திசையில் நெய்யை வைத்துத் தர்ப்பை முனையில் நெய் பிந்துவை

"ஓம் ஹூம் விஷ்ணவே ஸ்வாஹா"

என்று சொல்லிக்கொண்டு ஓமம் செய்வதாகிய அதிச்ரயணமும், அதன் பின்னர் தன் தேகத்தை உருத்திர சொரூபமாகத் தியானித்துக் குண்ட நாபியில் நெய்யை வைத்து,

"ஓம் ஹூம் ருத்ராய சுவாஹா"

என்று சொல்லிக்கொண்டு நெய்பிந்துவை தர்ப்பை நுனியால் ஓமம் செய்வதாகிய உத்வாசனமும் செய்து, ஓட்டையளவுள்ள இரண்டு தர்ப்பைகளினால் செய்யப்பெற்ற பவித்திரத்தைக் கட்டைவிரல், அணிவிரல்களால் எடுத்து அஸ்த்திரத்தால் நெய்யை அக்னிக்கு எதிர்முகமாக மூன்று முறை உத்ப்லாவனம் செய்க. அவ்விதமே தனக்கு எதிர் முகமாக இருதய மந்திரத்தால் சம்பிலவனம் செய்து, அந்தப் பவித்திர முடிச்சை அவிழ்த்து, இருதய மந்திரத்தால் மந்திரித்து, தர்ப்பையைக் கொழுத்தி நெய்யில் தோய்த்து அஸ்திரத்தால் அக்னியில் போடவேண்டும். அவ்விதமே பிறிதொரு தர்ப்பையை எடுத்து, நெருப்பிலே கொழுத்தி, கவசத்தால் நெய்யை வலமாகச் சுற்றி மீளவும் நெருப்பிலே போடுவதான நீராஞ்சனமும் செய்ய வேண்டும்.

பின்பு, சாண் நீளத்து இரண்டு தர்ப்பைகளை நடுவில் கிரந்தியாக முடிந்து, பிரணவத்தை உச்சரித்து, நெய் மத்தியில் வடக்கு நுனியாகப்போட்டு, வலது பக்கம் இடது பக்கம் இரண்டினையும் முறையே சுக்கில பக்கம் கிருஷ்ண பக்கங்களாகவும்; வலது, இடது நடுப்பக்கங்களை முறையே பிங்கலை, இடை, சுழுமுனை ஆகிய மூன்று நாடிகளாகக் கற்பித்து, சுருவத்தினால் வலப்பக்கமாக நெய்யை எடுத்து,

"ஓம் ஹாம் அக்னயே ஸ்வாஹா"

என்று வெண்மையான அக்னியினுடைய வலது கண்ணிலும் இடப்பக்கமாக நெய்யை எடுத்து,

"ஓம் ஹாம் சோமாய ஸ்வாஹா"

என்று அக்னியினுடைய இடது கண்ணிலும், நடுவே நெய்யை எடுத்து,

"ஓம் அக்னீஸோமாப்யாம் ஸ்வாஹா"

என்று அக்னியினுடைய நடுக் கண்ணிலும்,

"ஓம் ஹாம் அக்னயே ஸ்விஷ்ட க்ருதே ஸ்வாஹா"

என்று அக்னியின் வாயிலும் சிறிது ஓமம் செய்து மீதமானதை அந்தந்த நெய்யின் பாகங்களில் அஸ்திர மந்திரத்தை உச்சரித்துக்கொண்டுவிட வேண்டும். இது சம்பாத ஓமம் எனப்படும்.

(ஈண்டு ஒரு சிறப்புண்டு. அதாவது சுக்கில பக்ஷமாயின் அப்போது வலது கண்ணில் அதற்குரிய மந்திரத்தை உச்சரித்துக்கொண்டு ஓமம் செய்யவேண்டும். அச்சமயம் கிருஷ்ண பக்ஷமாய் இருந்தால் முதலாவது இடது கண்ணிற்கு அதற்குரிய மந்திரத்தை உச்சரித்து ஓமம் செய்து அதன் பின்னர் வலது கண்ணிற்கு ஓமம் செய்தல்வேண்டும்) அதாவது,

"ஓம் ஹாம் சோமாய ஸ்வாஹா"
"ஓம் ஹாம் அக்னயே ஸ்வாஹா"
"ஓம் ஹாம் சோமாக்னிப்யாம் ஸவாஹா"
"ஓம் ஹாம் அக்னயே ஸ்விஷ்ட க்ருதே ஸ்வாஹா"

என்று அக்னியினுடைய இடம், வலம், நடு ஆகிய கண்களிலும் வாயிலும் முன்போல் ஓமம் செய்து, நெய்யை சம்ஹிதா மந்திரம் கூறி, ரட்சை, அவகுண்டனம் இவைகளைச்செய்து, தேனு முத்திரை செய்துகொண்டு மூல மந்திரத்தால் அமிருதீகரித்து, மூலமந்திரத்தால் பூசை

செய்து, இருதய மந்திரத்தால் நெய்பிந்துவை அக்னியிலே விடவேண்டும்)

பின்னர்

"ஓம் ஹாம் சத்யோஜாதாய ஸ்வாஹா
ஓம் ஹூம் வாமதேவாய ஸ்வாஹா
ஓம் ஹூம் அகோராய ஸ்வாஹா
ஓம் ஹாம் தத்புருஷாய ஷ்வாஹா
ஓம் ஹோம் ஈசானாய ஸ்வாஹா"

என்று இவ்விதம் ஒவ்வொரு நெய்யின் ஆகுதியையும் அக்னியின் முகங்களில் சமர்ப்பிக்கவேண்டும். அதன் பின்னர் வக்திரானு சந்தானுகுதிக்கு வேண்டி, மந்திரங்களனைத்தையும் உச்சரித்து வக்திரானு சந்தானுகுதியையும் செய்யவேண்டும். அதன்பின்

"ஓம் ஹாம் ஹிம், ஹூம், ஹைம் ஹோம் சத்யோஜாத வாமதேவ அகோர தத்புருஷ ஈசானுப்யாம்
ஸ்வாஹா"

என்று அக்னித் திசை முதல் வாயுதிசை ஈருகவும், நிருதி திசை முதல் ஈசானத்திசை முடிவாகவும் நெய்யை ஓமம் செய்வதான வக்திரை கீகரண ஆகுதியும் செய்யவேண்டும். இதன்பின்னர் அவைகளை அனுசந்தானம் செய்துகொண்டு ஏகீபாவம் செய்து நாமகரணத்திற்காக ஈசானத்தால் அருச்சித்து அஸ்திரத்தால் மூன்று அல்லது ஐந்து ஆகுதிகள் செய்து,

"சிவாக்னிஸ்தவம் ஹூதாசன"

என்று மூலத்தால் அக்னிக்கு நாமகரணம் செய்து, தனியே மூன்று ஆகுதிகள் செய்து அருச்சித்து, அவர்களை உத்வாசனம் செய்யவேண்டும். பின்பு குண்டத்தின் அளவாக அக்னியின் வாயை உண்டுபண்ணி, நடுநாக்கில் சௌளம் முடிவாகவுள்ள சமஸ்காரங்கள் அனைத்தையும் செய்து, அவை பூர்த்தியடையும் பொருட்டு வௌஷடை இறுதியில் உடைய மூலமந்திரத்தால் பூரணுகுதி செய்யவேண்டும்.

பிறகு உபநிஷ்கிராமம் முதலிய கன்மாக்களும் செய்ய வேண்டும்.

அதன்பின், உட்கார்ந்து கொண்டு, ஹவிசுக்கு அக்னி எடுத்து அப்புறம் வைத்து அக்னிபகவான் மகிழவும் பலம் உள்ளவராகவும் ஆகவேண்டி பதினாறு அங்குல நீளமுள்ள பதினாறு பலாச சமித்துக்களை ஓமம் செய்யவேண்டும். பின்னர் சிவாக்னியை தியானம் செய்து, சிவாக்னியின் இருதயத்தில் சிவனை ஆவாகனம் செய்து அருச்சிக்க வேண்டும். பின்னர் சிவமுகத்திற்கும் அக்னிமுகத்திற்கும் ஐக்கியத்தைப் பாவித்து நாடீ சந்தானம் செய்துகொள்க. இவ்வாறு அக்னி, யாகசாலையின் ஸ்தண்டிலம், கும்பம், ஆசிரியரின் இருதயம் ஆகிய நான்கு இடங்களிலும் சிவன் இருப்பதாகச் சிந்திக்கவேண்டும். பின்பு சாமான்ய சிறப்பு தர்ப்பணார்த்தமாக மூலத்தால் சதத்வய (200) ஓமம் செய்து, தசாம்ச ஓமம் செய்து பூர்ணாகுதியையும் செய்யவேண்டும்.

மேலே குறித்த சிவ தீட்சாவிதிகள் அனைத்தும் சிவ தீட்சையின்போது செய்யவேண்டிய குறிப்புகளை சிவ பூஷணத்தில் குறிப்பிட்டுள்ளவாறு கண்டோம்.

இனி, அகோரசிவாசாரியார் இயற்றியுள்ள "ஆகம தீக்ஷாவிதி" என்னும் நூலில் நிர்வாண தீட்சை முறையினை விளக்கியுள்ளார். முதல் ஆறு ஏடுகள் இன்றி குறைவுடையதாக உள்ளது. ஆகவே வாசகர்களின் நன்மைகருதி வேறு நூல்களில்* கூறப்பட்டுள்ள நிர்வாண தீட்சா விதி அதிவாசகிரியையின் (விடுபட்ட பகுதி) முன் பகுதியைச் சேர்த்து மொழிபெயர்ப்பில் மட்டும் தருகின்றோம்.

"பின்பு சமய விசேட தீட்சைகளால் தூய்மை படுத்தப் பட்ட சிஷ்யனுக்கு மலபரிபாகம் செய்ய சக்திநிபாதம் பிறந்து ஞானம் அடைந்த குருவானவர் நிர்வாண தீட்சை

---

* "க்ரியாக்ரம த்யோதியிலிருந்து" இதுவும் அகோர சிவாசாரியார் இயற்றியதே.

2

அளிக்கவேண்டும். அதற்கு முன்போல் யாகம், சருவன்னம், பிராயச்சித்தம், சிஷ்யப்பிரவேசம், சமய தீட்சையும்செய்து நிர்வாண தீட்சை கொடுப்பதற்காக மூலமந்திரம் முதலிய பதினொரு மந்திரங்களும், ஸ்வாஹாவை முடிவாகக் கொண்ட மந்திரங்களும், வௌஷட்டை முடிவாகக் கொண்ட மந்திரங்களும், தர்ப்பணம், தீபம் முதலியன முன்போல் கூறி நிறைவேற்றியவுடன், குரூர ஜாதி வசனங்கள், புருவ நெறிப்பு, பயங்கரமான முகம் இவைகளுடன் பாசக்கட்டினை செய்யவேண்டும்.

பிறகு, சிவனை வணங்கி சிஷ்யனுக்குச் சிவனைக் காட்டி இறைவனிடம் விண்ணப்பம் செய்க,

'இறைவா! இந்த சிஷ்யன் எனக்கு உள்ளும் புறமும் நட்புள்ளவனாய் உள்ளான். இவன் கெட்டிக்காரன். நிர்வாண தீட்சைப் பெறுவதற்கு வந்தான். இவன் உயர் குலத் தோன்றல். சிவபூசை செய்பவன். சைவசமயத்தில் உள்ளவன். ஆகையால் மோட்சம் உண்டாக்கத்தக்க அருள் பாலிக்கவேண்டும்' என்று கூற 'அப்படியே செய்' என்று பரமசிவன் சொன்னதாகப் பாவித்துக்கொள்க.

பின்பு, சிவாக்னிக்குத் தென்புறத்தில் மண்டலம் செய்து, பிரணவத்தால் ஆஸனமிட்டு ஷடுத்தாஸனம் பூசித்து, அதன்மேல் சிஷ்யனை நிற்கவைத்து அத்வந்யாஸமாக அஷ்டத்ரிம்சத் கலாந்யாஸம் செய்து, மூலமந்திரத்தால் தலையில் பூசித்து, மண்டலத்தில் வடக்கு முகமாய்ச் செவ்வையாக நிறுத்திக் கன்னிகையால் சரியான நூல் புரியை மூன்றாக இழைத்து, மீண்டும் மூன்றாகச் செய்து ஒன்பது புரியுடை நூலாக்கி அந்த நூலை அஸ்திர மந்திரத்தால் புரோட்சனம் செய்து, கவச மந்திரத்தால் அவகுண்டனம் செய்து, மூலமந்திரத்தால் வணங்கி, சுஷீம்ன வடிவமான இந்நூலை நான்கு அங்குலத்திற்கு இடைவெளியில் பன்னிரு அங்குலம் விட்டு, அதற்குப்பின், சிகை நுனியில் மூலமந்திரத்தால் கட்டி, கால் விரல்வரை தொங்கவிடுக.

ஆண்களுக்கு வலப்பக்கத்திலும், பெண்களுக்கு இடப் பாகத்திலும் நூலைத் தொங்கவிடுக. அவ்விடத்திலேயே வசித்து முன்போல ஸம்ஸ்காரம் செய்து பாசநூலை நன்கு ஸம்ஸ்காரம் செய்து, கர்த்தரியைச் சேகரித்து கும்பத்தில் உள்ள சிவனுக்கு நிவேதனம் செய்து முன்போல் கட்டுக.

பின்பு, இடகலை, பிங்கலைகள் ஒரே நிலையில் இருக்கும் ஸுஷும்னையைத் தாமரை நூல்போல் எண்ணி, 'ஓம் லம் ஸுஷும்னையை நம:' என்று அர்ச்சித்து, சிஷ்யனுடைய உடலில் இருந்து வாங்கி, நூலில் கூட்டி, வணங்கி, அவகுண்டனம் செய்க.

"ஸுஷும்னையை ஸ்வாஹா"

என்று மூன்று சன்னிதான ஆகுதி செய்து அந்த நூலைச் சக்திவடிவாகக் காரிய, கர்ம, . போக ஆயதனமாகப் பாவித்து,

"ஓம் ஹௌம் சக்தயே நம:"

என்று சிஷ்யன் தலையில் பூசித்து, நூலில் நியாசம் செய்து, அர்ச்சித்து அவகுண்டனம் செய்து

'சக்தயே ஸ்வாஹா'

என்று மூன்று சன்னிதான ஆகுதி செய்து, சிஷ்யனுடைய இதயத்தில் அஸ்திர மந்திரத்தால் புரோட்சனம் செய்து

'ஓம் ஹ: ஹூம் பட்'

என்று மலரால் சிஷ்யனுடைய இதயத்தில் நாராச முத்திரையால் தாடனம் செய்க. ஹூங்காரத்தை உச்சரித்து தன்னுடைய ரேசகத்தால் வெளிப்பட்டு சிஷ்யனுடைய இதயத்தை அவனுடைய இடகலையில் பூரகத்தினுல் நுழைந்து அவனுடைய உயிரை பிரம்மரந்திரம் வரைக்கும் கொண்டுபோய், நட்சத்திர வடிவாகவும் ஹம்ஸ எனும் பீஜாட்சரத்தில் இருக்கிறதாகவும் பாவித்து,

'ஓம் ஹாம் ஹாம் ஹாம் ஹ: ஹூம்பட்'

என்று ஜ்யேஷ்டையைப் போக்கி

'ஓம் ஹாம் ஹம் ஹாம் ஸ்வாஹா'

என்று அங்குச முத்திரையால் ரௌத்திரமாய் கூவி, அவனுடைய பன்னிரண்டாவது நிலைவரை (த்வாத சாந்தம் வரை) கொண்டுபோய் புள்நுனியில் உள்ள திவலை வடிவ மாகப் பாவித்து, சிவனை ஆத்ம மந்திரத்தால் ஸம்ஹார முத்திரையால் உள்வாங்கி, பூரகத்தினால் தன்னுடைய இதயத்தில் கொண்டுபோய் கும்பகம் செய்து மூல மந்திரத்தை உச்சரித்து ஆத்ம மந்திரத்தினால் பிரமம் முதலிய காரணேஸ்வரர்களுடைய தியாக முறைப்படித் தன்னுடைய பன்னிரண்டாவது நிலைவரை கொண்டுபோய் உள்வாங்கி, படைப்பு முறைப்படி, புருவ நடுவில் கொணர்ந்து, பிங்கலையால் தன்னுடைய ரேசகத்தினால் வெளிப்பட்டு, ' நம: ' என்று முடிவடையும் ஆத்மமந்திரத் தால் நூலால் கூட்டி வியாபகம் பாவித்து அவகுண்டனம் செய்து மூலமந்திரத்தால் மூன்று சன்னிதானஆகுதி செய்க.

பாச நூலை தாடனம், அப்யுக்ஷணம் செய்து பிறகு

'ஹோம் ஹாம் போக்த்ருத்வ காரணாய மல
பாசாய நம:'

என்று இருள் வடிவாக எண்ணி,

'ஓம் ஹாம் லௌகீகாதி கர்ம பாசேப்ய:
ஸுகதுக்க மோஹ போக காரணேப்யோ நம:'

என்று அர்ச்சித்து மாயா பாசத்தை வெளுப்பும் கறுப்பு மாய்ப் பாவித்து

ஓம் ஹாம் மாயாபாசாய சரீரேந்த்ரிய
விஷய காரணாய நம:'

என்று அர்ச்சித்து, கர்ம பாசத்தை புகை நிறமாய் எண்ணி;

'ஓம் ஹாம் கர்ம பாசாய நம:'

என்று அர்ச்சித்து, மூன்று பாசங்களுக்கும் அதிபதியான சிவசக்தியை,

'ஓம் ஹாம் பாசாதிஷ்டாத்ர்யை சிவ சக்தயே நம:'

என்று அர்ச்சித்து இருள் வடிவமாகத் தியானித்து சிஷ்ய னுடைய உடலிலிருந்து வாங்கி நூலில் கூட்டி அர்ச்சித்து அவகுண்டனம் செய்து சன்னிதான ஆகுதி மூலமந்திரத்தால் தனித்தனியே மூன்று முறை

'சிவசக்தயே ஸ்வாஹா'

என்று சாந்தியதீத முதலாயுள்ள கலைகளை சிஷ்யனுடைய உடலில் நின்றும் வாங்கி நூலில் சைதன்யத்திலே (அறி விலே) கூட்டுக.

சாந்த்யதீத முதலிய ஐந்து கலைகளையும் கூட்டுக. (தத்வ புவன வர்ண பத மந்திரங்களுடனே ஐந்து கலைக ளும் கூட்டுதல்)

பிறகு,

'ஓம் ஹௌம் சாந்த்யதீத கலாயை நம:'

என்று நிரீக்ஷணம் செய்க.

'ஓம் ஹாம் சிவதத்வாய நம:'
'ஓம் ஹாம் சக்தி தத்வாய நம:'

என இரு தத்துவம் சாந்தியதீ கலையிலிருப்பன.

'ஓம் ஹாம் அநாச்ரிதாயை நம:
ஓம் ஹாம் அநாதாயை நம:
ஓம் ஹாம் அநந்தாயை நம.
ஓம் ஹாம் வ்யோம ரூபாயை நம:
ஓம் ஹாம் வ்யாபின்யை நம:'

என இவ்வைந்து புவனங்களும் சக்தி கலையிலிருப்பன.

